[21st August 1961

அங்கத்தினர் சொன்ன அளவுக்குப் பாசன வசதி கொடுக்க முடியுமா என்று பரிசீலனை செய்திருக்கலாம். கடைசியாக ஒரு முடிவுக்கு வரும் போது 13,674 ஏக்கராக்களுக்குத்தான் பயன்படும் என்று தெரிகிறது.

SRI M. KALYANASUNDARAM : இந்தத் திட்டப் பரிசீலனை பூர்த்தி செய்யப்பட்டு, மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தின் நகலில் சேர்க்கப் பட்டுள்ளது கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ? போதுமான நிதி ஒதுக்காத காரணத்தால் அது கைவிடப்படும் என்பதற்கு அறிகுறியாக இப்படி ஜவாப் சொல்லப்படுகிறதா ?

THE HON. SRI P. KAKKAN : ஏற்கெனவே பரிசீலனை செய்திருக்கிறார்கள் என்பது நன்றாகத் தெரியும். நீர்ப்பாசனத்திற்கு அதிகமாக நாம் திட்டம் போட்டோம். பிறகு திட்டக் கமிஷனில் குறைத்து விட்டதினால், நாம் எந்த எந்தத் திட்டங்களை எடுத்துக் கொள்வது என்பது பற்றி இன்னும் இறுதி முடிவு செய்யப்படவில்லை. ஆகையால், கைவிடப்படுமா, கைவிடப் படாதா என்ற பிரச்னை இல்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

*Palar Basin Rules*

* 1309 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

பாலாறு பேசின் விதிகள் மற்ற உப நதிகளுக்கும் உள்ளதை ரத்து செய்ய வேண்டுமென்று வடாற்காடு மாவட்ட அபிவிருத்திக் கவுன்சில் அனுப்பிய தீர்மானத்தின்மீது சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

9-30 a.m. THE HON. SRI P. KAKKAN : No action has been considered necessary on the resolution for relaxation of the Palar basin rules as such relaxation is being made wherever extension of irrigation by lift is possible without affecting the existing interests.

SRI V. K. KOTHANDARAMAN : கிணறுகளுக்கு பம்பு செட்டு முதலியன வைப்பதற்கு அனுமதி அளிக்கும்போது ஒரு கிணற்றுக்கும், இன்னொரு கிணற்றுக்கும் இடையில் 2,000 அடி இருக்கவேண்டும் என்பதாக சமீபத்தில் விதி ஏற்படுத்தியுள்ளதாகத் தெரிகிறது. அதையும் கூட ரத்து செய்ய வேண்டுமென்ற அளவுக்கு வடாற்காடு மாவட்ட அபிவிருத்திக் கவுன்சில் தீர்மானம் போட்டு, எல்லாக் கட்சிகளும் சேர்ந்து ஏகமனதாக அதை நிறைவேற்றி அனுப்பியிருக்கிறது. அதைப்பற்றி கனம் அமைச்சர் அவர்கள் என்ன செய்வதாக உத்தேசம் ?

DEPUTY SPEAKER : The hon. Member may put a separate question.

*Coconut (Exemption from salestax)*

* 1310 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state whether the Government have received any representation recently from the Provincial Coconut Producers and Merchants Association to exempt coconut from sales tax?

THE HON. SRI R. VENKATARAMAN : Yes, Sir.

SRI V. K. KRISHNAMURTHY : தேங்காயானது எண்ணெய் வித்துக் களுடன் சேர்க்கப்பட்டிருப்பதால் கொப்பரைக்கு வரி விதித்துவிட்டு, இள நீருக்கும், தேங்காய்க்கும் வரி விதிக்காமல் இருக்க அரசாங்கம் முன் வருமா ?